உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# சிவஞான சாதனம்

இந்நூல் இயற்றியவர்
விருத்தாசலம் வடக்குக் கோட்டை வீதி
வேதாந்த மடம்
**சிதம்பர சுவாமிகள்**



பொருள் உதவியவர்
தாமரைபூண்டி து. முத்தப் பிள்ளை



அச்சிட்டது
ஸ்ரீ முருகன் (பவர்) பிரஸ், விருத்தாசலம்.
1959] [விலை 0-6-0

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# சிவஞான சாதனம்

இந்நூல் இயற்றியவர்

**விருத்தாசலம் வடக்குக் கோட்டை வீதி**

வேதாந்த மடம்

**சிதம்பர சுவாமிகள்**

★

பொருள் உதவியவர்

தாமரைபூண்டி **து. முத்தப் பிள்ளை**

★

அச்சிட்டது

**ஸ்ரீ முருகன் (பவர்) பிரஸ், விருத்தாசலம்.**

1959 ] [ விலை 0-6-0



மோகமெனுங் கடல்கடந்து முத்தியெனுங்
கரைகாண்பான் முதிர்ந்த நாலாம்
பாகமெனு மலர்கொண்டு பக்தியெனும்
புனலாட்டிப் பரிந்து சாத்திச்
சோகமெனப் பாவித்துத் துரியமெனும்
விளக்கேற்றிச் சோக நீங்கி
ஆகமெனுங் கோயிலின்கண் ணறிவென்னுங்
கணபதிக்கே யன்பு செய்வாம்.

உ

ஓம் சரவணபவாய நம:




பேறு கிடைத்திடப் பேதமை நீங்கிட
ஆறுமுகத் தருளையனை யேத்துவாம்.

அறுவித சமயத் தோர்க்கு மறுமுக சாமி யாகிச்
செறிபரப் பிரம்மம் யானே யென்றுசின் மயிலி லேறிக்
குறுமுனிக் கருளிச் சீவக் குகைதொறும் வீற்றி ருந்த
மறுவிலாக் குகனைப் போற்றி மாய்த்தனனென் பிறவியெல்லாம்

சிவமயம்




# மதிப்புரை

இச்சிவஞான சாதனம் என்னும் ஞான நூலைப் படிக்கக் கேட்டேன். இந்நூல் சைவம், வைஷ்ணவம், வேதாந்தம், சித்தாந்தம் முதலான வேறுபாடின்றி பரம்பொருளை அடைவதற்கு இனிய சாதனங்களைக் கூறியிருப்பது மிக்க வியக்கத்தக்கது.

யாவரும் இந்நூலை ஏற்று, உணர்ந்து, பயன் பெறுவார்களென்பது என்னுடைய மனத்துணிபு என்பது உண்மை.

**சபா - சிவப்பிரகாசம் பிள்ளை,**
**சுத்தாத்துவித சைவசித்தாந்தப் பேராசிரியர்,**
**சிதம்பரம்.**

சிவமயம்

# மதிப்புரை

சிவஞான சாதனம் என்னும் சீரிய இந்நூலை இயற்றியவர், விருத்தாசலம் என்று வழங்கும் திருமுதுகுன்றத்திலிருக்கும் வேதாந்த மடத்து அதிபதி ஸ்ரீலஸ்ரீ ஆ. சா. சிதம்பர சுவாமிகள் அவர்கள் அடியேனுக்கும், என்து நண்பர் வக்கீல் பார்த்தசாரதி முதலியார் முதலியோருக்கும் பகவத்கீதையை முறையாகப் பாடம் கற்பித்த ஆசிரியர்.

அவர்களுடைய வித்துவத்தையும் அனுபோக ஞானத்தையும் அடியேன் அறிய வல்லவனன்று. அவர்கள் திருமழபாடியிலிருந்த ஸ்ரீ சுயம்பிரகாச சுவாமிகளின் மாணவராகிய உடையார்பாளையம் ஸ்ரீ ஆறுமுக சுவாமிகளின் மாணவர். குரு பக்தியில் சிறந்தவர். தனது குருவின் ஞாபகார்த்தமாய் ஸ்ரீ ஆறுமுக சுவாமிகளுக்கு உடையார்பாளையத்தில் கோயில் கட்டி நித்திய பூஜை, குரு பூஜை முதலியவை மிகவும் செம்மையாக நடைபெற்று வரும்படி ஏற்பாடு செய்துள்ளார்கள்.

இதைவிடத் தங்கள் குரு ஸ்ரீ ஆறுமுக சுவாமிகள் கைவல்லிய நவநீதத்திற்கு எழுதிவைத்திருந்த உரையை அச்சிட்டு வெளிப்படுத்தியும், சிவஞான போதத்திற்கு வேதாந்த சித்தாந்த சமரசக் கருத்தாக உரை எழுதி

அச்சிட்டு வெளிப்படுத்தியும், ரிபு கீதையிலுள்ள ஸ்ரீ நடராஜ மூர்த்தி தோத்திரங்களை மட்டும் தொகுத்து சிறு புததகமாக அச்சிட்டு வெளிப்படுத்தியும் உலகுக்கு உபகாரமாய் நன்றி செலுத்திய உத்தமரார்வர்.

அடியேனுக்கு சிவஞான போதம் பாடம் கற்பித்த ஆசிரியர் உயர்திரு. சபா-சிவப்பிரகாசம் பிள்ளை அவர்கள் இந்நூலுக்கு மதிப்புரை கொடுத்துள்ளார்கள். பசுவான ஆன்மா பாசத்தை விட்டகன்று பதியை அடைவதற்கான சுலபமான வழியை இந்நூலில் காட்டப்பட்டிருக்கிறது. இவ்வ மக்கள் யாவரும் செய்யவேண்டியதும் செய்யக்கூடியதுமான கடமை. ஷை சுவாமிகள் மக்களிடம் கொண்ட கருணையினுல் செய்த இந்த நூலை யாவரும் படித்து அனுஷ்டித்துப் பயன் பெறும்படி வேண்டுகின்றேன்.

அப்படிச் செய்வதுதான் சுவாமிகள் அவர்களுக்குச் செய்கின்ற நன்றியாகும்.

அடியேன் எழுதும் ஆற்றலில்லாதவனுனலும் சுவாமிகள் குணங்களின் பெருமையை அறிந்திருந்ததனுல் இந்த நூலின் பயனை அனுசரித்து இம்மதிப்புரையை எழுதத் துணிந்தேன்.

விருத்தாசலம்
21-11-59

**ச. அரங்கசாமி பிள்ளை,**
வக்கீல்.

ஓம் தத்சத்
ஸ்ரீ முருகன் துணை
திருச்சிற்றம்பலம்

# முகவுரை

உலகியற் கல்வி வீட்டியற் கல்வியெனக் கல்வி இரண்டு வகையினதாம். அவற்றில் உலகியற் கல்வியானது சரீரத்திற்குச் சாதகமாகுமே தவிர, சரீரத்துள்ளிருக்கும் உயிருக்குச் (ஜீவனுக்கு) சாதகமாகாது (உதவியில்லை). அன்றியும், உலகியற் கல்வி ராசத குணத்தைச் சார்ந்தது. அது உலகப் பிரசித்திக்கனுகூலம்போற்றேன்றினும் ஜனன மரண ஜரா வியாதி முதலான சம்சார துக்கங்களைப் போக்காது. அவற்றை விருத்திபண்ணும்.

ஆனதால், காலம் போக்காது சத்துவ குணத்தைச் சார்ந்ததான வீட்டியற் கல்வியை விசாரித்துணர்ந்தப்பியாசித்து அனுஷ்டிக்கவேண்டியதவசியம். அவ்வீட்டியற்கல்வியானது அப்பியாசித்தனுஷ்டிப்பவனது ஜெனன மரண ஜரா வியாதி முதலான சம்சார துக்கங்களை அடியோடு போக்கி, சீவனை நித்தியானந்தம் அனுபவிக்கச்செய்கின்றது.

ஆகலின், சரீரத்துள்ள அழுக்கை நீக்கி சுத்தம்செய்வது போல மனதிலுள்ள அழுக்கை நீக்கி சுத்தஞ்செய்வதில் முயற்சிக்கவேண்டும்.

மனம், வாக்கு, காயங்களால் புண்ணிய பாபமாகிய இரு வினைகளும் மனதில் சம்பந்தமாகின்றது. அவ்விரு வினைகளின் வாசனை சூட்சுமசமஸ்காரமாய் மனதில் தங்குகின்றது. அதனை அழுக்கென்றும் மலம் என்றுங் கூறப்படும். அம்மலம் உள்ளே சாட்சியாகப் பிரகாசிக்கின்ற ஆனந்த சொரூபமாகிய சிவத்தை மனதில் விளங்கவொட்டாமல் மறைக்கின்றது. அம்மறைப்பு நீங்கி மனம் ஆனந்த சொரூபத்தில் ஒருமையாயிருந்து ஆனந்தமனுபவிப்பதற்கு வீட்டியற் கல்வியப்பியாசஞ்செய்வதாகிய சீவனது முயற்சியும், சிவனது அருளும் வேண்டும்.

ஆகையினால், இந்நூலிற் கூறிய முக்திக்குபாயமான சாதன குணங்களையுணர்ந்து முக்கியமாய் சிவஞானத்திற்கு பகிரங்க அந்தரங்க சாதனங்களை ஆராய்ந்தறிந்து ஈஸ்வர பக்தி, குரு பக்தியுள்ளவர்களாயனுஷ்டிப்பவர்கள் சிவனருளால் சிவஞானம் பெற்று, பிறவித் துன்பம் நீங்கி, நித்தியமாகிய முத்தியின்பம் அனுபவிப்பார்களெனக் கருதி வீட்டியற் கல்வியைச் சார்ந்ததும், எனது சற்குரு ஸ்ரீ ஆறுமுக ஞானதேசிக சுவாமிகள் சிஷ்யர்களுக்குபதேசித்ததுமான உபதேச மொழிகளில் சில பகுதிகளைத் தொகுத்து சிறு

புத்தகமாக அச்சிட்டு சாதகர்களுக்குபகாரமாக வெளிவரச் செய்தோம்.

இதில் முன்பின் மாறுதல் பிழைகள் காணப்பட்டால் அவை உபதேச மொழிகளிலிராது. தொகுத்த வகையில் புத்தி பிரம்சத்தாலேற்பட்டதென பெரியோர்கள் சகித்துக் கொள்வார்களாக.

கரும்பின் ரசத்தைக் கட்டியாக்கி பந்தோபஸ்துசெய்து கொள்வதுபோல் சாதகர்கள் ரசமான சாதனங்களை ஒன்று சேர்த்து மனதில் பந்தோபஸ்து செய்துகொள்வார்களெனத் துணிந்தெழுதினேம். சிவார்ப்பணம்.

ஸ்ரீ சிவபெருமான் திருவருளால் இதற்குப் பொருளுதவி செய்த **தாமரைபூண்டி துரைசாமி பிள்ளை குமாரர் முத்த பிள்ளைக்கு** ஆரோக்கியமான ஆயுளும் சித்தசுத்தி துவாரா சிவஞானமும்பெற்று முத்தியின்பம் எய்துக.

**ஆ. சா. சிதம்பர சுவாமி,**
**வேதாந்த மடம்,**
வடக்கு கோட்டை வீதி,
**விருத்தாசலம்.**

# பொருளடக்கம்

சிவமயம்

திருச்சிற்றம்பலம்



செம்பொரு ளனுபவந் திடமா யுதித்திட
அம்பல் வாணனை யகத்து ளிருத்துவாம்.

முன்னை நான்மறை முடியினில் வீற்றிருப் பவனை
யன்னை யத்தனு யுலகெலா மமர்ந்திடு பவனை
யென்னை யாளுடை யிறைவனை யிருண்மலங் கழியப்
பொன்னி னம்பலத் தாடிய புனிதனைத் தொழுவாம்.

உ

சிவமயம்

கணேசாய நம :

திருச்சிற்றம்பலம்

# சிவஞான சாதனம்

ஆனைமுக னறுமுக னம்பிகைபொ னம்பலவன்
ஞானகுரு வாணியை யுள்நாடு.

உற்பவந் தொலைந்திட வொருபொரு டோன்றிடக்
கற்பகக் களிற்றையே கருத்து ளிருத்துவாம்.

## ஆழத்துப் பிள்ளையார் துதி

பொங்கரவது வுமிந்தும் புரிசடையதனிற் சேர்த்து
அங்கரந்தனி லிடத்தி லழகியமானை யேந்துஞ்
சங்கரன்சே யெம்பா சந்தகர்த்தைந்து மொருங்கறுக்க
ஐங்கரங்கொண்ட வாழத்தையனை வணக்கஞ் செய்வாம்.

## விருத்தாம்பிகை துதி

ஆண்டகுருவே கண்மணியே யருளேநீ நானென்றுருகப்
பூண்டவடிவை யென்னுடைய புந்தியதனு ணின்றுணர்த்தி
ஈண்டபடியே யென்னுவி லிருந்துமுரைக்க வேண்டிடுநீ
நீண்டமாலு மயன்போற்று நிமலவிருத்த நாயகியே.

## சிவன் முதலியோர் துதி

அகிலசகன் ஞயகனு யனந்தசத்தி
யமைவுற்ற வகண்டசிவன் சரணம்போற்றி
நிகிலசகன் மாதாவாய் நித்தியானந்த
நிசவடிவா மம்பிகையின் சரணம்போற்றி
சகலவித விக்கினமுந் தீர்த்தெல்லோருக்குஞ்
சாதகமாம் விநாயகனற் சரணம்போற்றி
தகைமைமிகு மன்பர்க்குச் சிவஞானத்தைத்
தந்தருளுஞ் சண்முகனற் சரணம்போற்றி.

## 1. முத்திக்குபாயமான பக்தி வழியாடு

இவ்வுலகில் பரத கண்டஞ் சிரேஷ்டமானது. இதிலிருப்பவர்களுஞ் சிரேஷ்டர்களே. இக்கண்டத்தில் சீவன் முத்தி பெற்றவர்களனேகர். அவற்றிற்கேதுவென்னவெனில்,

அல்லா வினைதா னழகாய் வரினும்
செல்லார் பெரியோ ரவைசெய் வதனில்
தொல்லார் குலமே தொடருந் தொழிலே
பொல்லா வெனினுஞ் செயலே பொருளே

என்னும் ஸ்ரீ பகவான் வாக்கியப்படி வருணம், ஆசிரமம், பேதத்தை முன்னிட்டு கருமம், பக்தி, ஞானம் என்னும் மார்க்கங்களைக் கிரமமாக அனுஷ்டிப்பது இப்பரத கண்டத்திற்குள்ளது.

நாம் பிறவித் துன்பத்தினின்று நீங்கி முத்தியின்பமடைவதற்கு முதன்முதல் செய்யவேண்டியது சுவதர்மானுஷ்டானமே. சுவதர்மானுஷ்டானத்தைக் கைவிடக்கூடாது. மேலும், பக்தி மார்க்கங்களையும் அனுஷ்டிக்கவேண்டியது.

அதற்கு ஈஸ்வரனுடைய கல்யாண குணங்களையும் ஈஸ்வர சொரூபத்தையும், குரு லட்சணங்களையும் குரு சொரூபத்தையும், குரு பக்தன் லட்சணங்களையும் மகான்களைக் கொண்டு அவசியம் தெரிந்துகொள்ளவேண்டியது.

மோட்சமடைவதற்கு சுலபமான சாதனம் பக்தியே. பக்தி, ஞானத்திற்கு அந்நியமல்ல. பக்தியே ஞானம். பக்தியென்பது ஈஸ்வரனிடத்திலும் குருவினிடத்திலும் உண்டாகும் மேலான பிரியமே. பக்தி சம்பாதிப்பதற்கு ஸ்திரீ முதலானவர்களும் அதிகாரிகளே. பக்தி ஒருவனிடத்திலிருந்தால் முத்தியவன் கையிலிருப்பதே. ஆனதால், ஒவ்வொருவரும் பக்தி சம்பாதிக்கவேண்டியதவசியம்.

பக்தியானது சற்கருமங்களை அனுஷ்டிப்பதனால் நாளுக்கு நாள் விருத்தியடைகின்றது. ஆனதால், தினந்தோறும் ஸ்நானஞ்செய்தல், சுத்தமாயிருத்தல், விபூதி தரித்தல், ருத்திராக்ஷம் தரித்தல், காலை மாலை அனுஷ்டானங்களைச் செய்தல், பஞ்சாக்ஷராதி மந்திரங்களை ஜெபஞ்செய்தல், சிவாலயம், விஷ்ணு ஆலயங்களைத் தெரிசனஞ்செய்தல், சிவபூஜை செய்தும் பகவத் குணங்களைக் கேட்டும் இன்புறுதல், திருநாமம், துளசிமணியணிதல், நல்லவர்களுடன் சேர்க்கை

குருபூஜை நடத்தல், தேவாரம், திருவாசகம், பகவத் கீதை முதலியன பாராயணஞ் செய்தல், கோவில் மடங்களில் அலகிடல், மெழுக்கிடல், புஷ்பம் தொடுத்து சாத்தல், திருவிழா நடத்தல், சிவ, விஷ்ணு பக்தர்களைக் கண்டால் வணங்கல், அன்னமளித்துபசரித்தல், இயன்றவரை உதவி புரிதல், பெரியோர் சொற்கடவாமை இவ்வாறுன நன் மார்க்கங்களை அனுஷ்டித்துவந்தால் ஈஸ்வரனிடத்தில் பிரயத்தனத்தால் நாளுக்கு நாள் பக்தி அதிகமாகும். அதாவது, அந்தக்கரணம் பகவதாகாரம் (ஈஸ்வர சொரூப பாவனை) செய்யப்படுகின்றது. இதனை சாதன பக்தியென்று சொல்லப்படும்.

எப்போது பிரயத்தனமின்றி அந்தக்கரணம் பகவதாகாரம் சுபாவமாகவுளதாகின்றதோ அப்போது பல ரூப பக்தியென்று சொல்லப்படும். பல ரூப பக்தியே ஞானமாம். அதுவே பராபக்தி. அது கிடைத்தால் பிறகு ஒன்றிலும் ஆசை செனிக்கமாட்டாது. இந்த பராபக்தி சம்பாதிப்பதற்காகவே குரு இலட்சணம், குரு பக்தன் இலட்சணம் தெரிந்துகொள்ளற்பாலது.

மானிட தேகங் கிடைத்தபோதே மோட்சத்தையடைய முயலவேண்டும். அதிலுங் காலத்தைப் போக்காமல் பால்யத்திலேயே முயலவேண்டும். நாம் ஒரு பெரியவாளை ஸ்ரீ சற்குருவாகக்கொண்டு வேதாந்த சாஸ்திரங்களில் பிரவிருத்தித்து பிர்ஹ்ம நிச்சயம் பெறவேண்டுமேயல்லாமல்

விருதாவாகக் காலங்கழிக்கலாமா ? கண காலமும் வீணுகக் கழித்தல் கூடாது. ஏனெனில், மரண சமயத்தில் கோடி உபாயங்களைச் செய்தபோதிலும், கணம் நிறுத்திவைக்க முடியாது. இத்தன்மைய விலை மதிக்கக்கூடாத காலத்தை வியர்த்தமாக்குதல் மூர்க்கத்தன்மையாகும். மேலும், சீலம், சந்தோஷம், க்ஷமை, சகிப்பு, தயை முதலிய குணங்களை நாம் சம்பாதிக்கவேண்டும்.

சிவபக்தி, குருபக்தியின்றி ஜெனனமரண சம்சாரத்தைக் கடக்கமுடியாது. பக்தியே பரமார்த்தத்தினைத் தருவதாம். பக்தியே பரமுத்தியினைத் தருவதாம். பக்தியே பவரோகத்தினைக் கெடுப்பதாம். பக்தியே மேலான சிவஞானத்தினைத் தருவதாம். பக்தியில்லாதவர்களெல்லாந் துக்கிகளாவர். பக்திக்கு பிரேமை என்று சொல்லப்படும். பகவானுடைய கதையில் பிரியமும், ஆனந்தக் கண்ணீரும், மயிர்க்கூச்சும் எவனுக்குண்டாகின்றதோ அவன்றான் சிவபக்தன். சர்வ சீவர்களிடத்திலும் காருண்யமும், பிரியமாய்ப் பேசுதலும், சர்வ சீவர்களது நலத்தில் சிரத்தையும், சர்வ சீவர்களிடத்தில் தோஷத்தைக் காணுமையும், குணத்தைக் காணுதலும், சர்வ சீவர்களிடத்திலும் மித்திர பாவமும் சிவபக்தனுக்குளதாம்.

நமக்குப் பக்தர்களோ, பெரியவாளோ, ஸ்ரீ சற்குருவோ அநேக சன்ம புண்ணியவசத்தால் கிடைத்தும் கைவிடுவோமாஞல், பகுத்தறிவு குறைந்து தவறுதலான காரியங்களைச்

செய்து, ஆசைப் பெருக்கினுல் மீண்டும்மீண்டும் துக்கத்திற் கேதுவான பாவங்களிற் பிரவிருத்தியாய்ப் பகுத்தறிவின்றிய சென்மமுண்டாகும். ஆகையினுல், மனித சென்மம் மாருமல் பிறவித் துன்பம் நீங்கிப் பேரானந்தம் அனுபவித்து முத்தி யடையுமுபாயங்களையுணர்ந்தனுஷ்டிக்கவேண்டியது சித்தம்.

## 2. சைவ சமயாசாரவனுஷ்டானங்களைச் செய்ய வேண்டியதவசியமானது

நாம் சகல நன்மையும் அடைவதற்குரித்தாகியது மனித சென்மமே. அதைச் சிவபெருமான் நமக்குக் கொடுத்திருக் கிருர். அது நீங்கும்படியான வழிகளில் செல்லக்கூடாது. இயற்கையாகவே சைவசமயாசாரங்களை அனுஷ்டித்தவர் களின் குலத்தில் பிறந்தவர்களும், சைவசமயாசாரமில்லாத குலத்தில் பிறந்தவர்களாயினும் அசைவமாகிய அனுசாரத்தை விடுத்து சைவசமயாசாரத்தை அனுஷ்டிக்கவேணுமென்னும் உறுதியுள்ளவர்களாகிய எல்லோருமே விபூதி தரித்தல், உருத்திராக்ஷமணியணிதல், பிரதிதினமும் ஸ்நானம்செய்தல், சுத்தமாயிருத்தல், ஆலயம் வழிபடுதல், பெரியபுராணம், பக்த விஜயம் முதலிய பக்தர் சரித்திரங்களைப் படித்தல், தேவாரம், திருவாசகம், பகவத்கீதை முதலியன பாராயணம் செய்தல், பஞ்சாக்ஷராதி மந்திரங்களைக் குருமுகமாகக் கேட்டு ஜெபஞ்செய்தல் முதலிய சைவசமயாசாரயனுஷ்டானங்களை அனுஷ்டிக்கவேண்டியது.

சைவசமயாசாரவனுஷ்டானங்களுள்ளவர்களுக்கே சிவ பெருமான் கிருபைசெய்கிறர். அவரது கிருபையினுல் திட காத்திரமான சரீரமும், புத்தியுக்தி சாமர்த்தியமும், கிரகம், மனைவி, புத்திரன், தனம், தான்யாதி சகல சௌபாக்கியங் களையும் அடையலாம். மீண்டும் மீண்டும் சுத்தமுடைய குலத்திலும் ஐஸ்வர்யவான்களது குலத்திலும் சென்மம் உள தாகும். மேலும், சுகமான போகங்களனுபவிக்கத்தக்க திவ்விய தேவ சரீரமுமுண்டாகும்.

அன்றியும், அவரருளால் * அஹிம்சை, சத்தியம், அஸ்தேயம், பிரஹ்மசரியம், அபரிக்கிரகம் என இயமம்

---

* 1. அஹிம்சை — எந்தப் பிராணியையும் மனம் வாக்கு காயங்களால் துன்புறுத்தாமை, 2. சத்தியம் — பிறர் பொருட்டாவது தன் பொருட்டாவது பொய் சொல்லா திருத்தல், 3. அஸ்தேயம் — மறைவினுலாவது பலாத் காரத்தினுலாவது பிறர் பொருளை அபகரியாதிருத்தல், 4. பிர்மசரியம் — பர ஸ்திரீயை இச்சியாதிருத்தல் (ஏக பத்தினி விரதமாயிருத்தல் பிர்மசரியத்திற்குச் சமானம்) 5. அபரிக்கிரகம் — பிறரிடத்தில் பரிக்கிரகியாதிருத்தல் (தேகதாரணத்துகன்றி அதிகம் கிரகியாதிருத்தல்) என இயமம் ஐந்து.

1. சௌசம் — மணலினுலும் ஜலத்தினுலும் சரீரஞ் சுத்தஞ்செய்தல் (மைத்திரியாதி குணங்களால் உள்ளே மனதில் ராகத் துவேஷாதி அசுத்தங்களைப் போக்கல்),

ஐந்து, சௌசம், சந்தோஷம், தபசு, சுவாத்தியாயம், ஈசுர பிரணிதானம் என நியமம் ஐந்து ஆக பத்து குணங்களு முண்டாகும். அதனால், நிஷ்காமகர்மத்தில் புத்தி ஸ்திரமாகும். நிஷ்காம கர்மானுஷ்டான மிகுதியினால் பாபம் நீங்கி மனம் சுத்தமாகும். சுத்தமான மனதில் நித்தியாநித்திய வஸ்து விவேகம். இக முத்திரார்த்த பல போகவிராகம், சமாதி ஷட்க சம்பத்தி, முமுட்சுத்துவமாகிய நான்கு சாதனங்களும் நமக்குளதாகும். அதனால், சற்குரு லாபம் உண்டாகும். அதனால், ஆத்மா இன்னது, அனாத்மா இன்னது என்று வேறு பிரித்தறிவதாகிய சிரவணமுண்டாகும். அதனால், யுக்திபூர்வகமாய் சிந்தனை வடிவ மனனமுண்டாகும். அதனால், தெளிதல் வடிவ நிதித்தியாசனமுண்டாகும். அதனால், சவிகற்ப சமாதியுண்டாகும். அதனால், நிர்விகற்ப சமாதியுண்டாகும். அதனால், மகாவாக்கியத்தின் பொருளாயுள்ள பிர்ஹ்மான்மைக்கியமாகிய அப்பிரதிபந்த (அஞ்ஞான சந்தேக விபரீதமின்றிய)

---

2. சந்தோஷம் — கர்மாதீனமாய்க் கிடைத்த போகங்களில் திருப்தியாயிருத்தல், 3. தபசு — இந்திரியங்களை நிக்ரகித்தல், ஏகாதசி, சிவன்ராத்திரி முதலிய விரதாதிகளையனுஷ்டித்தல், 4. சுவாத்தியாயம் — திருவாசகம், தேவாரம், பகவத்கீதை முதலியன பாராயணஞ்செய்தல், 5. ஈசுர பிரணிதானம் — ஈசுவரனைப் பூஜித்தல், நித்திய நைமித்திக சகல கர்மங்களையும் சிவார்ப்பணம்செய்தல் என நியமம் ஐந்து.

அபரோக்ஷ சாட்சாத்கார ஞானமுண்டாகும். அதனால், அஞ்ஞானம், அஞ்ஞான காரியமாகிய சகல அனர்த்தங்களும் நீங்கி பிர்ஹ்மானந்த பிராப்தியாகிய மோக்ஷமுளதாகும். இவ்வாறு முயற்சி செய்வதனால் நாம் சகல நன்மையும் அடையலாமென்பது திண்ணம்.

நாம் சைவசமயாசாரவனுஷ்டானங்களை அனுஷ்டிக்காவிடில் சிவபெருமான் கிருபையில்லாததாகும். இல்லாததாகவே பாபத் தொழிலில் பிரவிருத்தியாகி மிருகாதி சென்மமுண்டாகும். மனித சென்மம் நீங்கி, மாறாய் மிருகாதி சென்மமுண்டானால் உளதாகுந் துன்பத்திற்கு எல்லையில்லை. மேலும், ஒவ்வொரு சீவனும் துன்பப்படுவதை நேரில் காண்கின்றோம்.

தமோ குணமான பாபத் தொழிலில் பிரவிருத்தியுள்ளவர்களாயிருந்து மரணமடைந்தார்களானால் மறு பிறவி மிருக சென்மமுளதாகும் என்று ஸ்ரீ பகவான் பகவத் கீதையில் (மிக்கெழுந்தமமே விளைந்தபோதிறந்தோர் விலங்குச் சாதிகளிலே வீழ்வார்) என்று கூறியிருப்பது காண்க.

ஆனதால், நாம் சைவசமயாசாரவனுஷ்டானங்களையனுஷ்டித்து சிவபெருமான் கிருபையை நாமெல்லோரும் பெறும்பொருட்டே மடத்தில் குருசிஷ்ய சம்பிரதாயமும் சைவசமயாசாரியர் முதலான மகான்களின் குருபூசை முதலியனவும் எப்போதுந் தவறாது நடத்திவரவேண்டியது.

## 3. சாத்வீகம், ராசதம், தாமதம் என்னும் மூன்று குணங்களின் காரியங்கள்

1. நிஷ்காம புண்ணியத்தால் மனதில் சத்துவகுணம் மேலானபோது செனன காலத்திலுளதாகுந் துக்கம், மரண காலத்திலுளதாகுந் துக்கம், சரையினுலுளதாகுந் துக்கம், வியாதியினுலுளதாகுந் துக்கம் இவை முதலியன சம்சாரத்தி லுளதாகுந் துக்கங்களையெல்லாஞ் சிந்தித்துப் பார்ப்பன். மூட சங்கம் விட்டு நீங்கல், ஆசை, கோபம், மானம் முதலி யன நீக்கல், இந்திரியங்களைத் தகாத விஷயத்தில் செல்லா மல் அடக்கல், சாது சங்கத்தில் சேர்தல், குரு சேவை செய்தல், வேதாந்த சாஸ்திரங்களைப் படித்தல் முதலிய தெய்வ சம்பத்துண்டாகும்; ஞான அதிகாரியாவன்.

2. காமிய புண்ணியத்தால் மனதில் ராசதகுணம் மேலானபோது உலகிலுள்ள ஜனங்களெல்லாம் நம்மை இகழ்ச்சி செய்யக்கூடாது, எல்லோரும் புகழவேணும் இவை முதலிய சிந்தனையாகிய உலக வாசனையும், தேகம் நெடுநா ளிருக்கவேணும், ஆரோக்கியமாயிருக்கவேணும், அழகாய் இருக்கவேணும் இவ்வை முதலிய சிந்தனையாகிய தேக வாசனை யும், உலகிலுள்ள நூல்களெல்லாம் படிக்கவேணும், அவற் றின் அர்த்தமெல்லாம் அறியவேணும், அவற்றிற் கூறியபடி யெல்லா விஷயத்தையுமனுஷ்டிக்கவேணும் இவை முதலிய சிந்தனையாகிய சாஸ்திர வாசனையும் உண்டாகும். இதனுல்

விஷய சுகமும் உலகப் பிரசித்தியான வாழ்க்கையுமுண்டாகும்; ஞான அதிகாரமில்லை.

3. பாபத்தைச் செய்வதனுல் மனதில் தாமத குணம் மேலானபோது ஒன்றை ஆகும் ஆகாதென்று பகுத்தறிவின்மையும், ஒருக்காலும் லபியாத பொருளை இச்சித்தல், விருதா கோபஞ்செய்தல், அசத்தியங் கூறல், ஈஸ்வரனில்லை; புண்ணியமில்லை; பாபமில்லை; சொர்க்கமில்லை; நரகமில்லை என்று பேசுதல், யாரிடத்திலும் கடினமாக வசனித்தல் (வேகமாய் பேசுதல்), அனுசாரமாயிருத்தல், அவசியம் பொருள் செலவு செய்யத்தக்க காரியத்துக்கும் பொருள் செலவுசெய்யாதிருத்தல், கொலை, களவு, கள், காமம் முதலிய காரியங்களில் பிரவிருத்தியுண்டாதல், இவை முதலான அசுர சம்பத்துண்டாகும். இது ரொம்பவுங் கெட்டது; அவசியம் விடத்தக்கது. விடாதிருந்தால் பகுத்தறிவின்றிய ஜென்மம் உண்டாகும்.

தமோகுணம் விருத்தியானுல் அசுர சம்பத்துண்டாகும். விலங்காதிகளில் பிறக்குஞ் ஜென்மமுண்டாகுமென்று கைவல்ய நவநீதத்தில்,

கருதுமனே குணமூன்று மூன்றிலொன்று
கதித்தெழுந்தால் மற்றிரண்டுங் கரந்துநிற்குந்
தருமமிகுஞ் சத்துவமே லானபோது
சன்மார்க்க மானதெய்வ சம்பத்துண்டாம்

மருவுர்சோ குணமாகி லுலகதேக
வாதனையுஞ் சாத்திரவா தனையுமுண்டாம்
அருமகனே தமோகுணமே லானபோது
அசுரசம்பத் துண்டாகும் அறிந்துகொள்ளே.

என்று கூறியிருப்பது காண்க. அன்றியும், தமோகுண முள்ளவரை அசுர சுபாவமுள்ளவரென்றும், அவருக்குள தாகும் அனர்த்தங்களையும் பகவத் கீதையில் 14–16 அத்தி யாயங்களில் கூறியிருப்பது காண்க.

## 4. சத்துவ குணத்தினுல் சன்மார்க்கமான தெய்வ சம்பத்துளதாம்

1. சாஸ்திரார்த்தங்களில் சம்சயமின்றி அனுஷ்டிப்பதில் தற்பரனுயிருத்தல்.
2. எந்தவிதத்திலும் மனதைச் சுத்தமாயிருக்கும்படி செய்தல்.
3. மனதை சாக்ஷியாகிய ஆத்மாவின்கண் நிலைபெறச் செய்தலாகிய ஞானயோகஞ்செய்தல்.
4. குரு சாஸ்திரங்களாலுண்டாகும் ஆத்ம சொரூப நிச்சயம் மாருதிருத்தல்.
5. ஒருவர் நிந்தைசெய்வதை முன்னிட்டு விரோதமுண்டாகா திருத்தல்.

6. உண்மை பேசுதல்.

7. யாகம், தானம், தவங்களைச் செய்தல் (பகவத்கீதையில் கூறியுள்ளவை).

8. திருவாசகம், பகவத்கீதை, குரு கீதை முதலியன பாராயணமும், சிவபூஜை, ஆலய வழிபாடு முதலியனவும் செய்தல்.

9. தன்னை மதியாதிருத்தல் (வித்தியாமதம், தனமதம், குலமதம், ஆசாரமதம் கொள்ளாதிருத்தல்).

10. கோள் சொல்லாதிருத்தல்.

11. பிராணிகளை இம்சைசெய்யாதிருத்தல்.

12. பிறர் செய்யும் அபராதங்களைச் சகித்திருத்தல்.

13. தியாகத்தில் கருத்தாயிருத்தல்.

14. விசுவாசத்துடன் கேட்பவனுக்கு நிச்சயார்த்தத்தை மறைக்காது சொல்லல்.

15. சாந்தனாயிருத்தல்.

16. விஷயங்கள் சமீபத்திலடையப்பட்டும், புசிக்குஞ் சாமார்த்தியமிருந்தும் இச்சையின்றி இந்திரியம் அடக்கமாயிருத்தல். (இது விகிதமல்லாத விஷயத்தில் இந்திரியம் அடக்கல்)

17. குரூர சுபாவமில்லாதிருத்தல்.

18. செய்யத் தகாதவைகளில் வெட்கப்படுதல்.

19. வாக்கு, பாணி, பாதங்களால் வியர்த்தமான கிரியைகளைச் செய்யாதிருத்தல்.

20. பாலர், பாமரர் முதலிய மூட ஜனங்களால் அவமானம் பண்ணப்படாதவனுயிருத்தல் அல்லது மேன்மேலும் பிரக்ஞையுள்ளவனுயிருத்தல்.

21. எந்தப் பிராணியையும் கொல்லுதற்கு ஆயுதமெடாதிருத்தல்.

22. தேகேந்திரியங்களை ஸ்திரஞ்செய்வதில் முயற்சியுள்ளவனுயிருத்தல்.

23. அதிதிகளுக்குத் தானபூர்வகமாயீதல்.

24. துக்கிப் பிராணிகள்மீது இயன்ற உபகாரபூர்வகமாய்
2. கருணைசெய்தல்.

25. பாகியத்திலும் ஆந்தரத்திலுஞ் சுத்தமாயிருத்தல்.
3

26. பாகியேந்திரங்களை நிக்கிரகஞ்செய்தல்.

4. 27. நிஷ்காம சிந்தையாய் சிவபக்திசெய்தல்.

5. இவைகள் தெய்வ சம்பத்துள்ள மனிதர்களுக்குப் பொருந்துங் குணங்களாம். பிரயத்தனத்தினுல் இக்குணங்களைச் சம்பாதித்தவன் சிவஞானம் பெற்று மோக்ஷமடைவன்.

## 5. சிவஞானம் பெற்று மோக்ஷமடையும் மார்க்கம்

கைவல்யநவநீதத்தில்.

துற்சங்க நிவர்த்திவந்து சிவஞானம்
விரும்புவது சுபேச்சையாகும்
நற்சங்க மொழிவினவி ஞானநூல்பழ
கல்விசாரணை யாம்நம்பி
முற்சங்க வீடணைகள் விடற்றனுமா
னசியிந்த மூன்றினாலும்
சற்சங்க மனதிலுண்மை யறிவுதித்தல்
சத்துவா பத்திதானே

தத்துவத்தின் மனமுறைத்து மித்தையெலா
மறத்தலசம் சத்தியாகும்
அத்துவிதா னந்தம்வரும் திரிபுடிபோம்
பதார்த்தாபா வனையதாகும்
வத்துநிலை யிருந்தபடி யிருந்தமவுன
சுபாவந் துரியமாகும்
இத்துரிய பூமியைமுன் துரியாதீ
தப்பதமென் றதுவுங்கேளாய்

இவ்விரு செய்யுளிற் கூறிய ஞானபூமிகளின் பெயர் :— 1. சுபேச்சை, 2. விசாரணை, 3. தனுமானசி, 4. சத்துவா பத்தி, 5. அசம்சத்தி, 6. பதார்த்தாபாவனை, 7. துரியம்.

மோக்ஷத்திற்கு ஞானபூமிகளே முக்கியவுபாயமாம்.

(உளமொடுங்கு முபாயமே யோகமாகு
முணர்வுறு பூமிகளிந்த வுபாயமாகும்
வளமிகுமிப் பூமிகளா லன்றியிந்த
மாதேவ பெரியபதம் மருவலாகா)

என்று ஞானவாசிஷ்டத்திற் கூறியிருப்பது காண்க.

நிஷ்காம கருமஞ்செய்து மனஞ் சுத்தமாய் நித்தியா நித்திய வஸ்து விவேகம் முதலிய நான்கு சாதனங்களையுஞ் சம்பாதித்து ஞானபூமிகளின் கிரமமாயனுஷ்டித்து சிவ ஞானம் பெறுதலே மோக்ஷமடையும் உபாயமாம்.

## 1 6. ஞான மார்க்கம் இருவகை

2 ஞானபூமிகளின் வழி விகங்கமார்க்கமாம். பிபீலிகை மார்க்கமன்று. விகங்கம்—பட்சி மார்க்கம், பிபீலிகை—எறும்பு
3 மார்க்கம். (எறும்பு, பட்சி மார்க்கத்தையுணராது) இதனை ஸ்ரீ குமாரதேவ சுவாமிகள் அருளிச்செய்த 'சாஸ்திரக்கோவை
4 விஞ்ஞானசார'த்தில்,

ஞான மார்க்க மிருவகையாய்
5 நவில்வர் விகங்கம் பிபீலிகையென்று
ஆன வகையில் விகங்கமே
யமல வேத முடிவதனில்

ஞான மாகும் பிபிலிகையே
நவில்தந் திரத்தின் ஞானமாம்
ஆன விகங்கத் துணரா
மற்றதனின் வழியே யுணர்ந்திடுவாய்.

ஆசான் மாணுக் கனுடைய
வதிகா ரங்களவை பார்த்தே
பேசா நிற்கும் விகங்கமதைப்
பிரம மொன்றுமே மெய்யாய்
மாசா ருலகம் பொய்யாக
மாணுக் கன்ற னனுபவத்தில்
தேசாய் விளங்கி யக்கணமே
சிரத்தை பிறந்து திடமாக.

இதுவே நான்கு சாதனமு
மியல்பா யுடையோ ரெய்துநெறி
இதுவே யென்று மாறுத
விருளின் திமிரைத் தானுக்கும்
இதுவே ஞானு னந்தரசம்
ரமிக்கச் செய்யும் விஞ்ஞானம்
இதுவே யுனக்கு முறுதியென
இசைத்தா ளனையா ளருளுமையே.

இந்த நெறியில் விகங்கமதை
யெய்தி யானு மவளருளால்
பந்த மகன்று பரவெளியைப்
பார்த்தேன் அனைத்துந் தானுகி

அந்த நடுமுன் மூன்றுமில்லா
அகண்டா கார வடிவாகித்
தொந்த மொன்று மிலதாகிச்
சுய்மாய் விளங்கி யிருந்ததுவே

என்று ஞான மார்க்கம் இரண்டென்று கூறியிருப்பதை யூகித்துணர்க. அன்றியும்,

மேலாஞ்ச துட்ட சாதனங்கள்
மேவி நிறைந்த பேர்க்குரைக்கின்
மேலாமது நாமெனத் திடமாய்
விளங்குமவை யில்லாத வர்க்கு
மேலாம் பரமன் மான்மழுவாய்
விளங்கி யுரைத்தும் விளங்காது
மேலாஞ் சதுட்டசா தனங்கள்வர
மேவ வேண்டுஞ் சாதுசங்கம்

என்று அத்துவிதவுண்மையில் கூறியிருப்பது காண்க.

## 7. ஞானபூமியிலேற விரும்புகிறவன் செய்கையும் ஏறினவன் அடையும் பயனும்

மேற்கூறியபடி நான்கு சாதனங்களும் நிறைந்தவன் விகங்க மார்க்கத்தை அனுசரிப்பன். அவனே ஞானபூமிகளில் முதற்பூமி சம்பாதிப்பதற்கான உபாயங்களை ஆலோசிப்பன்.

நமக்கு மனித தேகம் (மனித பிறவி) கிடைத்தது ரொம்பவும் அருமையென்று சிந்திப்பன். அப்படிக் கிடைத்த இந்த தேகம் கொஞ்ச நாளைக்காவது இருக்குமென்னும் நிலைமையுமில்லையே என்று சிந்திப்பன்.

நாம் அபிமானித்திருக்கிற சகல பதார்த்தங்களையும் விடுத்து மரணமடைவது நிச்சயம், தேகம் இருந்தல்லவோ அதைச் சார்ந்த அகப்பற்று புறப்பற்றுகளில் அபிமானம் வைத்திருக்கவேண்டும், தேகம் நாசமாவதாயிருக்கிறதே அதனால், எதில் எவ்வித அபிமானம் வைத்திருப்பதனாலும் என்ன பிரயோஜனம், ஒன்றையும் காணேமே என்று சிந்திப்பன்.

பிறப்பதினாலும், மரணத்தினாலும், சரையினாலும், வியாதியினாலும், தரித்திரத்தினாலும் சம்சாரத்தில் அனுபவிக்கிற துக்கத்திற்களவில்லையே என்று சிந்திப்பன்.

எத்தனையோ சென்மங்களில் இவ்விதத் துக்கம் அனுபவித்திருக்கிறோம், சென்மமுள்ளபோது துக்கமிருத்தலால் செனன மரணத்தை ஒழிக்கும்படியான உபாயத்தைத் தேடுதலின்றி விருதாத் தொழில்களை நாம் செய்வதனாலென்ன பிரயோஜனமென்று சிந்திப்பன்.

இவ்வாறாக நினைத்து நாட்கள் வீணாகப் போகின்றதே என்ற ஏக்கமுற்றுப் பிறவித் துன்பத்தை நிவர்த்திக்குமுபாயங்களை நிச்சய புத்தியினால் ஆலோசனை செய்கிறவனெவனோ அவனே சத் சங்கத்தைச் சேருவான்.

அவனுக்கு முதற்பூமி சம்பாதிப்பதில் முயற்சியுளதாம். அவனே முதற்பூமியாகிய சுபேச்சையின் இலக்கணப்பிர காரம் அனுஷ்டிப்பவன்.

1. ஆன்ம ஞானத்தாலன்றி வேறு எதனுலும் கெடாத மோகம் நீங்கி சம்சாரத்தைத் தாண்டுவது எப்படி யென்று சிந்திப்பன்.

2. இடைவிடா விசாரத்திஞல் விஷயங்களில் தோஷத்தைக் கண்டு போகங்களிலும் அதன் சாதனங்களிலும் நாளுக்கு நாள் வைராக்கியத்தையடைவன்.

3. சித்த சுத்திக்கு அனுகூலமாய்ப் பெரியவாள் சேர்க்கை, கடவுள் வழிபாடு, ஜபம், தபம் முதலிய கிரியைகளேப் பிரியமாய்ச் செய்வன்.

4. சித்தசுத்தி விருத்தியாகவே பரம சந்தோஷமுடையவஞ யிருப்பன்.

5. நிந்திக்கத்தக்க சடர்களின் சேஷ்டைகளில் எப்போதும் அருவருப்படைவன்.

6. தனக்கேற்ற புண்ணிய கருமங்களே மாத்திரஞ்செய்வன்.

7. பிறரின் ரகசியமான குற்றங்களே வெளிப்படப் பேசான்.

8. பிறர் மனதிற்கும் தன் மனதிற்கும் துன்பமுண்டாகாத வண்ணம் இயமம், நியமம் பத்து குணங்களின் அனுஷ் டானமுள்ளவஞயிருப்பன்.

9. பாபத்தைச் செய்ய எப்போதும் பயப்படுவன்.

10. வினைப்படி கிடைக்கும் போகங்களைப் புசித்தலிலும் ஆவலின்றிப் புசிப்பன்.

11. நேயமாயும் வணக்கமாயும் அமைதியாயும் உசிதமாயும் சத்தியமாயும் பிரியமாயும் இதமாயும் தேச காலத்திற்குத் தக்கதாயுமுள்ள வசனங்களைப் பேசுவன்.

12. மனம், வாக்கு, காயம் ஒருமித்து, சாந்தி, தாந்தி, ஞான, விஞ்ஞான சம்பன்னர்களாகிய சாதுக்களைக் கண்டு சேவிப்பன்.

13. அத்தகைய குரு சேவைக்கனுகூலமாய்த் தனதிகளையும் பிற சாதனங்களையுங்கொண்டு குருவை சேவிப்பவனாய் அவர் வாயிலாகச் சிரவணாதி அப்பியாசஞ்செய்வன்.

இவ்வாறான குணங்களுள்ளவனாய் சிரவணஞ்செய்கின்ற புருஷனே முதற்பூமியப்பியாசித்து முடிந்தவனாம்.

அவனே இரண்டாம் பூமி விசாரணையின் இலக்கணப் பிரகாரம் அனுஷ்டிப்பவன்.

1. மகாவாக்கியார்த்தத்தையுபதேசிக்குங் குருவுக்கு இனிமையாய் நடப்பன்.

2. உபநிடதங்கள், பகவத்கீதை முதலிய வேதாந்த சாஸ்திரங்களைக் குருமுகமாகச் சிரவணஞ்செய்த ஞானார்த்தத்தை மனனஞ்செய்வன்.

3. ஆத்மா வேறு, சரீரம் வேறு எனப் பிரித்தறிவன்.
4. நல்லொழுக்கமாகிய தெய்வ சம்பத்தைப் பற்றியவனாய்த் தாரணை, தியானம் முதலியவற்றைக் குருமுகமாய்க் கேட்டு அனுஷ்டிப்பன்.
5. ஆத்மா, அனாத்மா விசாரமே இடைவிடாது செய்யத் தக்க காரியமென்றும் வேறு எதுவும் செய்யத்தக்க காரியமல்லவென்றும் அறிவன்.
6. மதம், பொறாமை, அகங்காரம், லோபம், மோகம் முதலியவற்றை விடுவன். (பாம்பு தோல் விடுவதுபோல் விடுவன்.)
7. குரு சாஸ்திராதிகளின் சிரவணார்த்த அப்பியாசத்தினாலும், திருஷ்டாந்த தாஷ்டாந்த யுக்தியினாலும் ஆத்மாவை நிச்சயித்தறிவன்.

இவ்வாறான குணங்களுள்ளவனாய் ஆத்மாவை விஷயம் பண்ணும் புத்தியுளதாகும் மனனம் செய்கின்ற புருஷனே விசாரணை என்னும் இரண்டாம் பூமி அப்பியாசஞ்செய்து முடிந்தவனாம்.

அவனே இரண்டு பூமிகளின் அப்பியாச பலத்தினால் மூன்றாம் பூமியாகிய தனுமானசியை அடைந்து நிதித்தியாசன வடிவ சவிகற்ப சமாதியப்பியாசஞ் செய்வன்.

மூன்றாம் பூமியும் அப்பியாசஞ்செய்து முடிந்தவன் நான்காம் பூமியாகிய சத்துவாபத்தியை அடைந்து, அப்பூமியில்

அபரோக்ஷமித்தையாத்துவ புத்திபூர்வகமாய் நிர்விகல்ப சமாதி சித்தித்து பிரத்தியக்கபின்னபிர்ஹ்ம சாட்சாத்கார ஞானத்தையடைவன். (அப்பிரதிபந்த (அஞ்ஞான சந்தேக விபரீதமின்றிய) அபரோக்ஷ ஞானம் உளதாம்.)

நான்காவது பூமியின் அனுபவமுள்ளவனை பிர்ஹ்ம வித்து ஞானியென்று கூறப்படும். 5, 6, 7 பூமிகளின் அனுபவமுள்ள ஞானிகளை முறையே பிர்ஹ்மவித்துவரன் என்றும் பிர்ஹ்மவித்துவரியானென்றும், பிர்ஹ்மவித்துவரிட்டனென்றுங் கூறப்படும். 'கைவல்யநவநீத'த்தில்,

முன்னிலங்க ளேறிய மூவரு
    மப்பியா சிகளாம் முத்தரல்லர்
பின்னிலங்கள் வரன்வரியான்
    வரிட்டனெனுஞ் சீவன்முத்தர் பேதமாகும்
சொன்னநடு பூமிவந்த ஞானிகளே
    பிரம வித்தாந் தூயமுத்தர்
இன்னமுமப் பூமிகளின் பெருமைதனை
    நீயறிய நான்சொல் வேனே

நாலாம்பூ மியின்வருமுன் மூன்றுபூமியு
    மடைந்து நடந்து மாண்டோர்
மேலான பதமடைந்து பிறந்துமெள்ள
    மெள்ளவந்து வீடு சேர்வார்
மாலான பவத்தில்விழார் முதற்பூமி
    கிடைப்பதுவே வருத்தம் மைந்தா
காலான முதற்பூமி கைவந்தால்
    முத்தியுங் கைவந்த தாமே

என்று கூறியுள்ளது. ஆகலின், முதற் பூமியில் இரண்டாம் பூமியில் ஏறினவர்கள் மேற்பூமிகளிலேருமல் மரணமடைந்தாலும் மீண்டும் எந்த விதத்திலும் மேல் பூமிகளில் கிரமமாயேறி சிவஞானம்பெற்று முத்தியடைவார்கள். மேலும், ஞானபூமி ஒன்றில் ஏறினுலும் பின்னர் மனித சென்மம் மாருது, இதர சென்மமும் வாராது. ஆகலின், ஒன்று இரண்டு பூமியின் அப்பியாசத்தையாவது யாவரும் சம்பாதிக்கவேணுமென்னுங் கருத்தினுல் ஞானபூமி இரண்டின் இலக்கணமாத்திரம் விளக்கஞ்செய்யப்பட்டது.

ஞானபூமி ஏழின் இலக்கணங்களேயும் மத்தியில் இறந்தவர்கள் அடையும் நன்மைகளேயும் கைவல்ய நவநீதம், ஞானவாசிஷ்டம், பகவத்கீதையிலும் விபரமாய்க் கூறியிருப்பது காண்க.

ஸ்ரீ இராமலிங்க சுவாமிகள் அருளிச்செய்த அருட்பா, மகாதேவமாலேயில்,

மெய்ஞ்ஞான விருப்பத்திலே றிக்கேள்வி
மீதேறித் தெளிந்துஇச்சை விடுதலேறி
அஞ்ஞான மற்றபடி யேறிவுண்மை
அறிந்தபடி நிலேயேறிஅது தானென்னுங்
கைஞ்ஞானங் கழன்றேறி மற்றதெல்லாங்
கடந்தேறி மௌனயியற் கதியிலேறி
எஞ்ஞானம் அறத்தெளிந்தோர் கண்டுங்காணேம்
என்கின்ற வனுபவமே யின்பத்தேவே

என்று ஞானபூமி ஏழிலேறித் தெளிந்தோர் கண்டுங் காணுத

அனுபவமே என்பதாகச் சிவபரம்பொருளைப் புகழ்ந்து கூறியிருப்பது காண்க.



## 8. சந்நியாச தர்மம்

### நாரதபரிவிராஜகோபநிஷத்

1. ஒருவரை அண்டி சேவிக்கக்கூடாது.

2. அதிவாதங்களாகிய தர்க்கங்களை விட்டுவிட வேண்டியது.

3. ஒரு கட்சியிலுஞ் சேரக்கூடாது.

4. சிஷ்யர்களைச் சேர்க்காமலிருக்கவேண்டியது. (முயற்சியினால் மதிப்புக்காகச் சேர்க்கக்கூடாது.)

5. வெகு கிரந்தங்களை அப்பியசிக்கக்கூடாது.

6. உபந்யாசம் (பிரசங்கம்) செய்யக்கூடாது. (குரு சிஷ்ய சம்பிரதாயவுபதேசம் செய்யலாம்.)

### மைத்திரியோபநிஷத்

குரு வாக்கியத்தினால் இரண்டாவதில்லாத ஒன்றேயுளதென்று எது நிச்சயிக்கப்பட்டிருக்கிறதோ அதுதான் ஏகாந்தம்.

## சந்நியாசியின் நித்திய கர்மம்

1. ஆத்ம சிந்தை உத்தமம். (சமாதி நிஷ்டையி லிருத்தல்)

2. சாஸ்திர சிந்தை மத்திமம். (நிதித்தியாசனமின்றிய சாஸ்திர சிந்தை மத்திமம்)

3. மந்திர சிந்தை அதமம். (அவ்விரண்டுமின்றிய மந்திர சிந்தை அதமம்)

4. தீர்த்த யாத்திரையில் சிந்தை அதமாதமம். (அம் மூன்றுமின்றிய தீர்த்த யாத்திரை அதமாதமம்)

இந்தச் சங்கதி சந்நியாசிகளுக்குச் சொன்னதேயன்றி மற்றவர்களுக்குச் சொல்லவில்லை. சகல விஷயங்களிலும் மனதில் வைராக்கியமுண்டானபோதே சந்நியாசம் வாங்கிக் கொள்ளலாம். மற்ற விதத்திஞல் வாங்கிக்கொள்ளுகிறவன் பதிதனுய்விடுவன். (இரண்டுங்கெட்டவன்)

அத்துவைதபாவனை தான் பிக்ஷையெடுத்துண்ணல்.

துவைதபாவனை புசிக்கத்தக்கதல்ல.

சந்நியாசஞ் செய்துகொண்டபின் சுவதேசத்தைத் தானுகவே விட்டு சிறைச்சாலையிலிருந்து விடுதலையடைந்த திருடனைப்போல் தூரத்தில் போய் வசிக்கவேண்டியது.

அகங்காரமாகிற பிள்ளையையும், திரவியமாகிற சகோதரனையும், மோகமாகிற வீட்டையும், ஆசையாகிற பெண்

சாதியையும் எப்போது விடுகிருனே அப்போது, முத்தன் என்பதில் சந்தேகமில்லை.

ஞானத்திற்கு முன் தோஷ திருஷ்டியினுலுண்டாகும் தீவிரதர வைராக்கியத்தால் சிஞ்ஞாசுவினுல் செய்துகொள்ளப்படுவது விவிதிஷா சந்நியாசம். ஞானத்திற்குப் பின் தோஷ திருஷ்டி, மித்தியாத்துவ திருஷ்டிகளால் தோன்றுந் தீவிரதர வைராக்கியத்தினுல் வித்வானுல் (ஞானியினுல்) செய்துகொள்ளப்படுவது வித்வத் சந்நியாசம் என்னும் இவ் விரு சந்நியாசத்தின் விபரம் சீவன்முத்திப் பிரகரணத்தில் கூறியிருப்பது காண்க.

அகத்தில் கடவுளைக் காண்பான் ஞானி என்பதாக

புறம்பு காண்குவன் புல்லிய னீசனை
* அறிந்த ஞானி யகமுறக் காண்பனுல்
எறும்பி காணுறி லின்கரும் பேகொளும்
செறிந்த வாடிலை தின்பன வென்பவே

என்று 'பிரபுலிங்க லீலை'யில் கூறியுள்ளது.

* 'அறிந்த ஞானி யகமுறக் காண்பனுல்' என்றது, சிவம் அறியப்படுவதாகிய திரிசயமல்ல, அறிவு சொரூபமாம். அறிவு சொரூபமாகிய சிவம் சத்தியம். அறியப்படுவதாகிய சகத்தும் சீவ சப்தத்தின் வாச்சியார்த்தமும் மித்தை, சீவ சப்தத்தின் இலட்சியார்த்தம் சிவம். அதுவே நான் என்னும் அகண்ட விருத்தியிலுளதாகும் ஞானத்தினுல் மித்தை

1. உடம்பினைப் பெற்ற பயனாவ தெல்லாம்
உடம்பினி லுத்தமனைக் காண.
2. ஒருபய னாவ துடம்பின் பயனே
தருபயனாஞ் சங்கரனைச் சார்.
3. மாசற்ற கொள்கை மனத்தி லடைந்தக்கால்
ஈசனைக் காட்டு முடம்பு.

என்று ஔவைக்குறளில் கூறியுள்ளது காண்க.

## 9. ஈஸ்வர நாமத்தை செபிக்கும் கிரமம்

பஞ்சாக்ஷரத்தை ஈஸ்வர நாமம் என்பதாக ஸ்ரீ திருஞான சம்பந்த சுவாமி திருவாக்கு.

'நாதன் நாமம் நமச்சிவாயவே'

'நந்தி நாமம் நமச்சிவாய'

என்று கூறிய ஈஸ்வர நாமமாகிய பஞ்சாக்ஷரத்தைப் பால போதத்தில் கூறுகின்ற 10 அபராதங்களையும் விட்டு செபிக்க வேண்டியது.

1. சாதுக்கள் நிந்தை.

---

யாகிய துவைத தோற்றம் மறைந்து சிவம் சேடித்து விளங் குதல் சிவத்தைக் காண்பதாம். துவைதத் தோற்றமின்றிச் சிவம் விளங்குவதே அத்வைத ஞானம்.

2. அசத் புருஷர்களிடத்து நாமத்தின் வைபவத்தைச் சொல்லுதல்.
3. சிவவிஷ்ணுக்களிடத்துப் பேதபுத்தி.
4. வேத வாக்கியங்களில் அசிரத்தை. (விசுவாசமின்மை)
5. சாஸ்திர வசனங்களில் அசிரத்தை.
6. குரு வாக்கியங்களில் அசிரத்தை.
7. ஈஸ்வர நாம மகாத்மியத்தில் அர்த்தவாத பிரமம். (துதி பரம் என்னும் மயக்கம்)
8. ஈஸ்வர நாமம் சர்வ பாபத்தையுங் கெடுப்பதாம் என்னும் புத்தியால் நிஷித்த (பாப) கர்மங்களை ஆசரித்தல். (செய்தல்)
9. மகத்தான புண்ணியத்தையுண்டாக்குவது ஈசுவர நாமமாம் என்னும் புத்தியால் விகித கர்மங்களை விடுதல்.
10. அந்நிய தர்மங்களோடு ஈசுவர நாமம் சமமாம் எனல்.

இந்த அபராதங்களை விட்டு, (1) பிராதகாலம், (2) மத்தியான காலம், (3) சாயங்காலம், (4) மத்திய ராத்திரிகாலம் ஆகிய இந்நான்கு காலங்களிலும் பிரித்து இலக்ஷம் அளவேனும் அல்லது அதனின் அதிகமேனும் ஈசுவர நாமத்தை உச்சரித்து ஈசுவரனிடத்துச் சித்த விருத்தியை நிறுத்தல் வேண்டும். இந்தக் கிரமப்படி ஈசுவர நாமத்தை உச்சரித்தல் எதுவோ அது பாபத்தையும் ஆசையையும் நாசஞ்செய்யும். இவை 'பாலபோத'த்தில் கூறியுள்ள கிரமம்.

இவ்வாருன குற்றங்களின்றி பஞ்சாக்ஷரதியான சமாதி இடையருது செய்கின்றவர் பந்தபாசமறுத்துப் பேரின்ப முத்தி எய்துவர்.

கெட்ட பூமியில் விருத்தியாகிற சப்பாத்தி முள், நல்ல பூமியில் முளைத்தால் மேலும் அதிகமாய் விருத்தியாவது போல, தியானம், ஜபம் செய்கின்ற நல்ல மனதில் தீயவினை சம்மந்தமாருல் அதிக பாப விருத்தியும் அதிகத் துக்கமும் உளதாகுமென்று அறிஞர் கூறுவர்.

ஆகலின், நல்ல மனதில் பாப சமஸ்காரஞ் சேராத வண்ணம் பகுத்தறிவிருல் சாக்கிரதையாய் தியானம், ஜபம் முதலிய புண்ணிய சம்ஸ்காரம் மனதில் விருத்தியாகும்படி செய்யவேணுமென்பது கருத்து.

## 10. வேதாந்திக்கு ஆறு பிரமாணம் அங்கீகாரம்

1. பிர்த்தியக்ஷ பிரமாணம், 2. அனுமான பிரமாணம், 3. உபமான பிரமாணம், 4. சப்த பிரமாணம், 5. அர்த்தா பத்தி பிரமாணம், 6. அபாவ பிரமாணம். இந்த ஆறு பிரமாணங்களும் சிவஞான அனுபவத்திற்குபயோகமாம்.

### 1. பிரத்தியக்ஷ பிரமாணம்

குருவுபதேசமாகிய மகாவாக்கியத்தின் இலட்சணை விருத்தி ஜன்னிய ஞானத்திற்குச் சாட்சி நித்திய பிரத்திய

காத்மாவாகிய சிவம் விஷயமாகும். இலட்சணவிருத்தி ஜன்னிய ஞானத்திலும் சிதாபாச ரூப பலத்திற்கு சிவம் விஷயமாகாது. ஆவரணபங்க விருத்திமாத்திரமான மன திற்கு சிவம் பிரத்தியக்ஷமாகும். இதுவே பிரத்தியக்கபின்ன பிர்ஹ்மஞானம். சிவம் சுயம்பிரகாசமாயிருத்தலால் சிதா பாசன் பிரகாசிப்பதில்லை. ஆனால், சூரிய பிரகாசத்தில் தீபம்போல் குன்றியிருப்பன்.

அஞ்ஞான காலத்தில் ஆத்மாவை வசப்படுத்திக்கொண்டு சிதாபாசன் விளங்குகின்றான். ஞான காலத்தில் சிதாபா சனை வசப்படுத்திக்கொண்டு ஆத்மா விளங்குகின்றார். சிவ ஞானம், பிர்ஹ்ம ஞானம். ஆத்ம ஞானம், தத்துவ ஞானம் என்னுஞ் சொற்களுக்குப் பொருள் ஒன்றே.

## 2. அனுமான பிரமாணம்

சீவன் பிர்ஹ்மாபின்னம், சேதனத்தன்மையால். எது சேதனமோ அது பிர்ஹ்மாபின்னம், திருஷ்டாந்தம், பிர்ஹ் மத்திற்போல (சேதனம்—அறிவு, பிர்ஹ்மம்—அறிவுசொரூபம்) பிரபஞ்சம் மித்தை, ஞானத்தால் நிவர்த்திக்கப்படுந்தன்மை யால், எங்கே ஞானததால் நிவர்த்திக்கப்படுந்தன்மை யுண்டோ அங்கே மித்தையாத்தன்மையுண்டு திருஷ்டாந் தம் சுத்தி வெள்ளிபோல.

## 3. உபமான பிரமாணம்

ஆத்மாவின் நித்திய சுத்தாதி தர்மத்திற்கு வேறான அநித்திய அசுத்தாதி தர்மமுடையது பிரபஞ்சமென்றும்.

அநித்திய அசுத்தாதி தர்மத்திற்கு வேருனது ஆத்மா வென்றும், அத்வைத இலட்சணம் துவைத இலட்சணங்களை சாக்கிரபதார்த்தம் சொர்ப்பனபதார்த்தம் ஒன்றுக்கொன்று வேருன தன்மையுள்ளதென்றுணர்வதுபோல திருட்டாந்தத் தால் தாட்டாந்த நிச்சயம், உபமான பிரமாணத்திஞல் தெரிந்துகொள்ளவேண்டியது.

## 4. சத்தப் பிரமாணம்

குருவுபதேசமாகிய மகாவாக்கியம் துவம்பதத்தில் சக்தி யார்த்தமான 28 தத்துவங்களையும் விட்டு இலட்சியார்த்த மான சாட்சியாகிய ஆத்மாவும், தத்பதத்தில் சக்கியார்த்த மான 35 தத்துவங்களையும் விட்டு சர்வ சாட்சியாகிய பிர்ஹ் மமும் ஒன்றே என்று இலட்சணுவிருத்தியிஞல் நீயே பிர்மஹ் மென்று அறிவிக்கின்றது.

## 5. அர்த்தாபத்தி பிரமாணம்

ஆத்மாவை அறிந்தவன் சோகத்தைக் கடக்கின்ருன். சோகத்தின் மித்தையாத்தன்மையின்றி ஞானத்தால் சோக நிவர்த்தி சம்பவியாது. ஆகலின், சம்சாரத்தின் மித்தையாத் தன்மையை நிச்சயஞ்செய்க.

உபாதியிஞலாகிய பேதமின்றி சீவபிர்ஹ்மங்களின் அபேதம் சம்பவியாது. (போஜனமின்றி பருமை சம்பவியா ததுபோல்.) ஆகலின், பேதம் உபாதியிஞலாகியதென்றும் மித்தையென்றும் நிச்சயம்செய்க.

## 6. அபாவ பிரமாணம்

மனோலயத்திற்குப் பின் நிர்விகல்ப சமாதி காலத்தில் அத்துவிதபிர்ஹ்ம மாத்திரஞ் சேடித்து நிற்க சகல அனாத்ம வஸ்துக்களின் அபாவமுண்டாகின்றது. அனாத்ம வஸ்துக்கள் மனோமாத்திரமாய்த் தோன்றினாலன்றி மனோலயத்தால் அனாத்ம வஸ்துக்களின் அபாவம் சம்பவியாது. ஆகலின், சகல அனாத்ம வஸ்துக்களும் மனோமாத்திரமென்றும் மித்தையென்றும் நிச்சயம்செய்க.

மேலும், சம்பந்த சாதிருசியங்களுக்கு வேறாய் பிரதி யோகியின் அபேக்ஷையோடு கூடியது அபாவம் எனப்படும். இங்கு நாநா என்பது சிறிதும் இல்லை என்னுஞ் சுருதி வாக்கியம். பாரமார்த்திகத்தன்மை விசிஷ்ட பிரபஞ்சத்தின் அபாவம் சொல்லுகின்றது.

இதனால் பிரபஞ்சத்தின் ஞானமுண்டானாலும் பிரபஞ்சம் பாரமார்த்திகத் தன்மையுடையது என்னும் ஞானமுண்டாக மாட்டாது. ஆகலின், பிரபஞ்சத்தை நிஷேதிப்பதில் அபாவ பிரமாணம் உபயோகமாம். இவ்வாறு ஆறு பிரமாணங்களும் சிவஞானம் பெற விரும்பும் சிஞ்ஞாசுக்களுக்கு உப யோகமாகின்றது.

## 11. சிஞ்ஞாசுக்களுக்கு ஈஸ்வர பக்தி, குருபக்தி இரண்டுமே முக்கியம்

எவனுக்குத் தெய்வத்தினிடத்து மேலான பக்தியிருக்கின்றதோ தெய்வத்தினிடத்திற்போல் குருவினிடத்துமிருக்கின்றதோ அந்த மகாத்மாவிற்கே சொல்லிய இவ்வர்த்தங்கள் பிரகாசிக்கும்.

ஒருவனுக்கு ஈஸ்வர பக்தி உள்ளபடி இருக்குமானல் அவனுக்கு குருபக்தியும் தானேயுண்டாகும். ஒருவனுக்கு குருபக்தி உள்ளபடி இருக்குமேயானல் அவனுக்கு ஈஸ்வர பக்தியுமிருக்கும்.

மானிட வடிவங்கொண்டு எழுந்தருளியிருக்கும் சற்குருநாதனிடத்தில் பக்தி பண்ணுவது சுலபம். அந்தப் பக்தி வந்த மாத்திரத்தில் ஈஸ்வர பக்தி தானே ஓங்கி வளரும். ஆகலின், சிஞ்ஞாசு குரு இலட்சணம், குருபக்தன் இலட்சணம் தெரிந்துகொள்ளற்பாலது.

### குரு இலக்கணம்

1. எவர் வேத நம்பிக்கையுடையவரோ, பேத புத்தியில்லாதவரோ, பெண்ணுசையின்றியவரோ, துராசார மொழிந்தவரோ, செய்நன்றி மறவாதவரோ, கொக்கு செய்கையில்லாதவரோ. சற்கருமத்தினின்று நழுவாதவரோ க்ஷமையுடையவரோ அவர், குருவெனப்படுகின்றார்.

2. எவர் கைம்மாறின்றி உபதேசிப்பவரோ, யாவராலும் பிரியப்படுபவரோ, மௌனத்தில் சதா சாதிப்பவரோ, தனித்தவரோ, வியாகூலம் அசூயை இல்லாதவரோ, பவரோகத்திற்கு வைத்தியரோ, சதா வேதாந்தவிசாரஞ் செய்பவரோ, மகா வாக்கியவுபதேசஞ் செய்பவரோ, வீண் வார்த்தை பேசாதவரோ, அவர், குருவெனப்படுகின்ருர்.

3. எவர் சகலருக்கும் இதத்தை நாடுபவரோ, சீடர்களின் தாபத்தைக் கெடுக்கிருரோ, நிர்மலமாய், சாந்தமாய், சாதுவாய், மிதமான வார்த்தையுடையவராய், நல்லொழுக்கமுடையவராய், இந்திரியஜெயமுடையவராய், சிஷ்யர்களின் சந்தேகங்களெல்லாவற்றையும் அடியோடு நிவர்த்திசெய்து ஜனனமரண பயத்தை விலக்குகிருரோ அவர், குருவெனப்படுகின்ருர்.

4. எவர் அகண்டமான ஒரே பிர்ஹ்மத்தின் ருசியினுல் திருப்தியுடையவராயிருக்கிருரோ, எவரைப் பார்த்தமாத்திரத்தில் மனதிற்குத் தாளுகவே சந்தோஷமும் தைரியமும் சாந்தியுமுண்டாகிறதோ, அவர், குருவெனப்படுகின்ருர்.

5. எவர் பிர்ஹ்மத் தியானமுடையவரோ, சீடர்களுடைய பக்குவம் பார்த்து தக்கபடி உபதேசிப்பவரோ, சீடர்களின் திரவியத்தை அபகரிப்பதன்பொருட்டு உபதேசியாதவரோ, பவம் என்னுங் காட்டிற் புகுந்து திசைமயக்கமென்னும் மோகத்தையடைந்த சித்தமுள்ளவர்களுக்கு வழி காட்டுகிருரோ, தர்பத்திரயமென்னும் அக்கினியால் தகிக்கப்

பட்ட சாந்தமின்றிய பிராணிகளுக்குக் க்ங்கையாக இருக்கிருரோ அவர், குருவென்ப்படுகின்ருர்.

## குருபக்தன் இலக்கணம்

1. எவன் அனேக சாஸ்திரங்களைக் கற்றபோதிலும் குரு கிருபையின்றி சித்த விஸ்ராந்தி உண்டாகாதென்று அறிந்தவனே, ஞானியானலும் தேகமுள்ளபரியந்தம் குருவை மறக்கலாகாதென்று உள்ளபடியுணர்ந்தவனே, குரு சந்நிதியில் அத்வைத பாவனை செய்யானே, குருவை ஈஸ்வரனுக மதித்து சதா குரு சமீபத்தில் வசிக்கிருனே, குரவன் வாக்கியம் நன்மையாயினும் தீமையாயினும் அதைக் கடவாமல் பிறரைக்கொண்டு செய்விக்காமல் தானே செய்துகொண்டு அடிமைபோலிருக்கிருனே அவன் குருபக்தன்.

2, எவன் குருவை நிந்திப்பவனைப் பார்த்துச் சகியானே, குரவனையே சிவமாகவும், தனது ஆத்மாகவும், மாதா பிதா பந்து முதலிய எல்லாமாகவும் பாவிக்கிருனே, குருவுக்கு அந்நியமாக ஒன்றையும் பாவியானே, குருவின் அனுக்கிரகத்தால் அத்விதியன் யான் என்னுந் திடநிச்சயத்தைச் சம்பாதிக்கிருனே, குருவில்லாதவன் மனிதனுயினும் மிருகந்தான் என்றும், சர்வ பிரயத்தனத்தாலும் குருவைச் சம்பாதித்து சிவ ரூபத்தையும், தன் ரூபத்தையும் ஒன்ருக அறிய வேண்டும் என்று பிறருக்குப் போதிக்கிருனே அவன் குருபக்தன்.

3. எவன் குருவென்னும் இரண்டெழுத்துள்ள மந்திரத்திற்குச் சமமான மந்திரம் எதுவுமில்லையென்றும் குரு மந்திரம் சர்வ அபீஷ்டத்தையுமளிக்குமென்றும் உணர்ந்தவனோ, சிவன் முதலியோர் கோபத்தினின்றுங் குரு இரட்சிப்பர் என்றும், குருவின் கோபத்தினின்று இரட்சிப்பவரொருவருமில்லையென்றும் நம்பிக்கையுடையவனோ, குரு சந்நிதியில் பொய் சொல்லுகிறதில்லையோ, எதிர்த்துப் பேசுகிறதில்லையோ, குரு கருத்துக்கு மாறுபடாமல் நடந்துவருகிறனோ, அவன் குருபக்தன்.

4. எவன் குரு சேவையினால் குலமே சுத்தமாகுமென்றும், குருவைத் திருப்தி செய்வதினால் பிர்மா, விஷ்ணு, சிவன் முதலியோர் திருப்தியடைவார்களென்றும் அறிகிறனோ, குரு பிரசாதத்தினால் தனது சொரூப ஞானமுண்டாகிறதென்றுங் கண்டானோ, எவன் துர்ச்சங்கத்தை விட்டுப் பாப கர்மத்தையும் விடுகின்றனோ, குரோத கர்வங்களை விடுகின்றனோ, பெண்ணாசையை ஒழிக்கின்றனோ, குருவின் பாதோகத்தைப் பருகி மிஞ்சியதைச் சிரசில் தரித்துக்கொள்வதே சகல தீர்த்தங்களிலும் மூழ்கிய பயனளிக்கும் என்று அறிகின்றனோ, அவன் குருபக்தன்.

5. எவன் காயத்தினாலும் மனதினாலும் வாக்கினாலும் சேவை, தியானம், தோத்திரமாகிய ஆராதனை செய்கின்றனோ, எவன் குரு சந்நிதியினின்று பிரபுவே! குல இறைவனே! ஞான சொரூபியே! தீனத்யாளுவே! தத்துவசொரூ

பியே! ஞானுக்கினியின் பிரபாவத்தால் சிஷ்யர்களின் அனேக ஜென்மங்களில் சம்பாதிக்கப்பட்ட கர்மபந்தங்களைத் தகிப்பவரே! என்று பிரார்த்திக்கிருனே, குரவனிலும் மேலான தத்துவமில்லையென்றும், மேலான தவம் இல்லையென்றும், மேலான ஞானமில்லையென்றும் குரவனையே சகல பூதங்களின் ஆத்மாவென்றும் அறிகிருனே, அவன் குரு பக்தன்.

குரு இலட்சணம், குருபக்தன் (சீடன்) இலட்சணங்களை விரிவாக ஸ்ரீ குரு கீதையிலும் சீடா சாரத்திலும் கூறியிருப்பது காண்க.

## 12. சத்துவகுணம் சிறந்தது

தன்மனம் சத்துவ குணத்தைச் சார்ந்து பழகுவதே
தன்சீவன் பேரின்பம் அனுபவிப்பதற்கு வழியாம்.

நமக்குச் சூழ்நிலையினல் சத்துவகுணம், ராசதகுணம், தாமதகுணம் என்னும் மூன்று குணங்களும் மாறிமாறியும் ஒன்றுக்கொன்று உயர்ந்தும் தாழ்ந்தும் மனதில் உள்தாகின்றது.

வாழுஞ் சத்துவ மற்றைய விரண்டையு மறைத்து
தாழு மற்றைய விரண்டு மத்தமோ குணந்த ழைப்பின்
வீழுஞ் சத்துவந் தமங்களவ் விரசதம் விளையின்
ஊழின் மற்றிரண் டுந்தாழ்ந் தொன்றுமிக் குளதாம்.

தக்கசத் துவமே நிகழ்ந்த போதி
றந்தோர் தெய்வயோ னிகளிலே சார்வார்
மக்களிற் பிறப்பா ரிசாத குணமே
வளர்ந்த போதுடம் பினைத்து றந்தோர்
மிக்கெழுந் தமமே விளைந்தபோ திறந்தோர்
விலங்குச் சாதி களிலே வீழ்வார்
ஒக்கமற் றிவற்றின் பலன்களுந் தெரிய
வுரைக்கின் றேனி வற்றையு முணர்வாய்.

சத்துவ மாந்தர் பரகதி யடைவர்
தமத்துளோ ரதோகதி சார்வார்
மத்திம குணத்தோ ராயினோர் நடுவின்
மானிடப் பிறவியாய் வாழ்வார்
இத்திற மாய வுருவமே விகாரி
யான விகாரியென் றிவற்றை
மெய்த்திற னுக வறிந்தவ னறிந்த
பொழுதிலே வீட்டின்ப மடைந்தான்

என்று ஸ்ரீ பகவான் கூறியிருப்பது காண்க.

*சத்துவகுணம் உயர்ந்தால் பகுத்தறிவு மிகுந்ததாய் மறு சென்மம் உளதாகும். ராசதகுணம் உயர்ந்தால் பகுத்தறிவு குறைந்து மத்திமமாய் மறு சென்மம் உளதாகும். தாமதகுணம் உயர்ந்தால் பகுத்தறிவின்றிய மறு சென்மம் உளதாகும். ஆகலின், சத்சங்க சகவாசத்தினுல் (நல்லவர்களின் சேர்க்கையினுல்) சத்துவகுணத்தை மிகுதியாகப் பழகுவது நமக்கு நன்மை பயக்கும்.*

ரிபு கீதையில்,

நரர்சுரராய்த் திரியக்கராய் நகவனுதி
நாநாவாய் நாடியிடு நாட்டமெல்லாம்
தெரிவுருவாய்த் திகழ்கின்ற தேவதேவன்
றிருவுருவே யென்றுதிடத் தியானஞ்செய்யில்
இருகுணமு மிகந்தமல சத்துவமேலா
யிருக்கின்ற சூக்கமனு விருத்திகொண்டே
பரமசிவன் பரிபூன்ற சொரூபந்தன்னைப்
பார்த்திடலாம் மற்றொன்றாற் பார்க்கவொண்ணு.

இச்செய்யுளில் பரமசிவன் பரிபூரண சொரூபத்தைச் சுத்த சத்துவ மனதினுல் பார்க்கலாமென்று கூறியிருப்பது காண்க.

## 13. மோட்சத்தின் அந்தரங்க பகிரங்க சாதனங்கள்

அனர்த்த நிவர்த்தி ஆனந்த பிராப்தியே மோக்ஷம். மோக்ஷத்திற்கு சாட்சாத் அந்தரங்க சாதனம் பிர்ஹ்மாத்ம வைக்கிய ஞானம். பிர்ஹ்மாத்மவைக்கிய ஞானத்திற்கு அந்த்ரங்க சாதனம் சிற்சடங்களைப் பிரித்தறியும் விசாரம், தத்பததுவம்பதார்த்த சோதனை, இரண்டும் சாதனமாம் அவ்விரண்டிற்கும் அந்தரங்க சாதனம் ஞானசாரியரான குருமுகமாக சிவவனுதி அப்பியாசம்.

குருலாபத்திற்கும் சிரவணுதி அப்பியாசத்திற்கும் சாட்சாத் சாதனம் நித்தியா நித்திய வஸ்து விவேகம். இக முத்திரார்த்த பலபோகவிராகம், சமாதிஷட்கசம்பத்தி, முமூட்சுத்துவம் என்னும் நான்கும் சாதனங்களாம்.

நான்கு சாதனங்களுக்கும் சாட்சாத் சாதனம் நிஷ்காம வுபாசனை, நிஷ்காம கர்மம் இரண்டும் சாதனங்களாம்.

அந்தரங்க, பகிரங்க சாதனங்களான இவற்றில் ஒன்றுக்கொன்று சமீபமாயுள்ள சாதனத்தை அந்தரங்க சாதனமென்றும் ஒன்றுக்கொன்று தூரமாயுள்ள சாதனத்தைப் பகிரங்க சாதனமென்றுங் கூறுவர்.

இதில் மோக்ஷோபாயமான சிவபக்தி, குருபக்தி சிவஞான சாதன குணங்கள் நாநா பிரகாரமாகக் கூறியுள்ளன. அவ்வெல்லாவற்றையும் அனுஷ்டிக்கக் கூடுமா என்னும் சங்கை நிகழலாகாது. முக்கியமாய் மோட்சத்தின் அந்தரங்க பகிரங்க சாதனங்கள் பூரணமானுல் நாநாபிரகாரமாகக் கூறிய சாதன குணங்களெல்லாம் வந்ததாக முடியும்.

மேலும், (துற்சங்க நிவர்த்தி வந்து சிவஞானம் விரும்புவது சுபேச்சையாகும்) என்று கூறியபடி சிவஞானம் பெற விரும்புகின்றவனுய் சிவபக்தி, குருபக்தி பூர்வகமாய் சாதனங்களைச் சம்பாதிக்கின்ற ஞான அதிகாரிக்கு சிவஞானத்தின் பகிரங்க அந்தரங்க சாதனங்கள் முழுவதும் சுலபமாய் பூரணமாகும். அவனே சிவனருளாலும் குரு கிருபையாலும் சிவோகம் என்னும் மகாவாக்கியப் பொருளான சிவஞானம்

பெற்று அனர்த்த நிவர்த்தி ஆனந்தப் பிராப்தியாகிய மோட்சமடைவன்.

இதைப் படிக்கின்றவர்கள் பலவிதமான சாதன குணங்களை எழுதியிருப்பதில் ஏதாவது ஏகதேசமாக சாதன குணங்களில் விருப்பம்வைத்து அனுஷ்டித்தாலும் அதனால் அவர்களுக்கு மற்ற குணங்களின் பிரகாசமும், அதனால் சிவபக்தியும் குருபக்தியும், அதனால் சிவஞானத்தின் பகிரங்க அந்தரங்க சாதனங்களும் பூரணமாகி முத்தி இன்பம் எய்துவார்கள். சித்தம்.

சிவஞான குருவும் வாழ்க சீருட னுலகி லென்றும்
சிவஞான சாதனநூ லோங்கியே சிறந்து வாழ்க
சிவஞானம் விரும்பியே சிரத்தையாய்ப் படிப்போர் வாழ்க
சிவனருள் பெற்ற சீவன் முத்தர்க ளெங்கும் வாழ்க.

திருச்சிற்றம்பலம்

உத்தியா யீச னும முருக்கமாய்க் கேட்போன் றனும்
உத்தம வீசன் றருளி லுண்மையாய்ப் பத்தி செய்வான்
வித்தகக் குரவன் றேடி வீட்சணம் பெறவே விப்பான்
முத்தியை யளிக்கும் ஞானம் முதன்மையாய்ப் பெற்றுவாழ்வான்.

குருபக்தி யீசன் பக்தி குறைவிலா மனத்தி னோர்க்கு
மருவுசா தனங்கள் நான்கு மன்னியே விரக்தி யோங்கும்
குருவின தருள்பா லிக்குங் கூறுமா வாக்கி யார்த்தம்
மருவியே ஞான வானாய் மகத்துவ முடையோ ராவர்.

ஆறிரு தடந்தோள் வாழ்க வறுமுகம் வாழ்க வெற்பைக்
கூறுசெய் தனிவேல் வாழ்க குக்குடம் வாழ்க செவ்வேள்
ஏறிய மஞ்ஞை வாழ்க ஆனைதன் னணங்கு வாழ்க
மாறிலா வள்ளி வாழ்க வாழ்கசீ ரடியா ரெல்லாம்..

திருச்சிற்றம்பலம்.

சுபம். சுபம். சுபம்.

## சிவஞான சாதனம் முடிந்தது.

---